ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமானுஜாய நம :

# நம்பெருமாள் விஜயம்

(ஸத்யம் ஸத்யம் புந: ஸத்யம் யதிராஜோ ஜகத்குரு:)

(மலர்- 285) Jan (1) / 2019



**நம்பெருமாள், எம்பெருமானார் அருளால் முயன்றவன்**

**'ஸ்ரீ அஹோபில தாஸன்' க.ஸ்ரீதரன்**

ஶ்ரீ:
ஶ்ரீமதே ராமானுஜாய நம:
திருவே தஞ்சம்
திருவரங்கனே தஞ்சம்
தஞ்சமடைந்த நம் ராமானுஜன் திருவடிகளே தஞ்சம்

கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரி நீர்
செய்ப்புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்
எப்பொருட்கும் நின்று ஆர்க்கும் எய்தாது நான் மறையின்
சொற்பொருளாய் நின்றார் என் மெய்ப்பொருளும் கொண்டாரே.

காவேரி வர்த்ததாம் காலே காலே வர்ஷது வாஸவ:
ஶ்ரீரங்கநாதோ ஜயது ஶ்ரீரங்கஶ்ரீச்ச வர்த்ததாம்

ஸத்யம் ஸத்யம் புந: ஸத்யம் யதிராஜோ ஜகத்குரு:

## உட்பொதிவு

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீபாஞ்சராத்ர ஆகம நூலான

# லக்ஷ்மீ தந்த்ரம்

(பகுதி – 105)

## ஸ்ரீலக்ஷ்மீ தந்த்ரம் – இருபத்து ஐந்தாவது அத்யாயம்
## (தாரா மற்றும் அநுதாரா மந்த்ரங்கள்)

ஸ்ரீருவாச:-

1. இத்தம் தே கதித: சக்ர தாரகஸ்யைஷ விஸ்தர:
ஸம்ஸார தாரிகாயா மே தாரிகாயா: ச்ருணு க்ரமம்

**பொருள் –** மஹாலக்ஷ்மி கூறுகிறாள் : இந்த்ரனே! நான் உனக்குத் தாரக மந்த்ரம் குறித்து இதுவரை உரைத்தேன். இனி இந்த ஸம்ஸார லோகத்தைக் காக்கின்ற தாரிக மந்த்ரம் குறித்து உரைக்கக் கேட்பாயாக.

2. வர்ணாநாம் விதிஸித்த்யர்த்தம் ஸம்ஜ்ஞா: பூர்வம் நிசாமய
ச்ருதாஸு விதிவத்யாஸு விதிர்மாந்த்ர: ப்ரவர்த்ததே

**பொருள் –** வர்ணங்களுடைய (எழுத்துக்கள்) விதிமுறைகள் குறித்து அறியும் முன்பாக அவற்றின் தன்மைகளை விளக்குகின்ற நாமங்கள் குறித்து அறிவாயாக. இதனைச் சரியாக அறிவதன் மூலமே உபாஸகன் மந்த்ரங்கள் குறித்து சீராக அறிகிறான்.

3. அகாராச்வாப்ரமேயச்ச ப்ரதமோ வ்யாபக: ஸ்ம்ருத:
ஆதிதேவஸ்தசாகார ஆநந்தோ கோபந: ஸ்ம்ருத:

**பொருள்** – “அ” என்னும் அக்ஷரம் “அப்ரமேயம்” எனப்படும். அதுவே ப்ரதமம் மற்றும் வ்யாபகம் என்றும் கூறப்படும். இந்த அக்ஷரத்தை “ஆதிதேவன், அநந்தன், கோபநன்” என்பர்.

4. ராமஸம்ஜ்ஞ இகாரச்ச இத்த இஷ்ட: ப்ரகீர்த்தித:
ஈகார: பஞ்சபிந்துர்வை விஷ்ணுர்மாயா புரந்தர

**பொருள்** – “இ” என்னும் அக்ஷரம் “ராம” எனப்படும். அதுவே இத்தம் மற்றும் இஷ்டம் என்றும் கூறப்படும். புரந்தரனே! “ஈ” என்னும் அக்ஷரத்தை “பஞ்சபிந்து, விஷ்ணு, மாயா” என்பர்.

5. உகாரோ புவநாக்யச்ச உத்தாம உதயஸ்ததா
ஊகார ஊர்ஜோ லோகேச: ப்ரஜ்ஞாதாராக்ய ஏவ ச

**பொருள்** – “உ” என்னும் அக்ஷரம் “புவநம், உத்தாமம், உதயம்” என்பர். “ஊ” என்னும் அக்ஷரத்தை “ஊர்ஜ, லோகேச, ப்ரஜ்ஞாதாரா” என்பர்.

ஸ்ரீரங்கநாச்சியார் திருவடிகளே சரணம்
ஸ்ரீகமலவல்லி நாச்சியார் திருவடிகளே சரணம்

... தொடரும்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

பகவத் ராமானுஜர் அருளிச் செய்த

# ஸ்ரீபாஷ்யம்

(பகுதி – 285)

**ஸித்தாந்தம்** - இவ்விதம் கூறினால் நாங்கள் பதில் உரைக்கிறோம் – "ஆகாச: அர்த்தாந்தரத்வாதி வ்யபதேசாத்"; ஆகாசம் என்பது பரப்ரஹ்மமே ஆகும்; ஏன்? "அர்தாந்தர வ்யபதேசாத்". அந்த ஆகாசம் மற்றவற்றிலிருந்து வேறுபட்டது என்பதை சாந். (8-14-1) – ஆகாசோ ஹ வை நாம ரூபயோர் நிர்வஹிதா - அந்த ஆகாசம் பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்துகிறது – என்றது. அதாவது பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்தும் ஆகாசமானது, (ஸம்ஸார) பந்தத்திலோ அல்லது முக்தி பெற்ற நிலையிலோ உள்ள ப்ரத்யகாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதே ஆகும். பந்தப்பட்ட நிலையில் உள்ள ஜீவாத்மா கர்மவசப்பட்டுள்ளதன் காரணமாக, பல பெயர்கள் மற்றும் ரூபங்கள் ஆகியவற்றை எடுத்தபடி உள்ளான்; இவ்விதம் உள்ளபோது, அவன் பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்தும் சக்தி கொண்டவனாக இருக்கமுடியாது. முக்தி பெற்ற நிலையில் உள்ள ஜீவாத்மாவிற்கு ஜகத் வ்யாபாரங்கள் (ஜகத்தை ஸ்ருஷ்டித்தல், காத்தல், அழித்தல்) போன்றவை ஸம்பவிக்காது என்பதால், அந்த முக்தாத்மாவும் பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்துபவன் அல்லன்.

அனைத்து லோகங்களையும் நிர்மாணிக்கும் வலிமை கொண்டவனாகிய ஈச்வரனுக்கே, பெயர் மற்றும் ரூபங்கள் உண்டாக்கவல்ல தன்மை உள்ளதாக ச்ருதிகளில் சாந். (6-3-2) - அநேந ஜீவேந ஆத்மந அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி - அனைத்து ஜீவாத்மாக்களிலும் உட்புகுந்து, அவற்றின் ஆத்மாவாக நின்று, பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்துகிறேன் - என்றும், முண். (1-1-9) – ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப: | தஸ்மாத் ஏதத் ப்ரஹ்ம நாம ரூபம் அந்நம் ச ஜாயதே - யார் அனைத்தையும் அறிந்தவனோ, யாருடைய

தவம் அனைத்து வித்யைகளுடைய ஞானமாக உள்ளதோ, அந்த ப்ரஹ்மத்திடமிருந்தே பெயர், ரூபம், அன்னம் ஆகியவை உண்டாகின்றன – என்றும், தை. (3-12-7) - ஸர்வாணி ரூபாணி விசித்ய தீரோ நாமாநி க்ருத்வாபி வதந்யதாஸ்தே - அனைத்தையும் அவற்றின் ரூபங்களுடன் உண்டாக்குபவன், இவை அனைத்திற்கும் பெயர் கொடுத்து, அந்தப் பெயரால் அழைக்கிறான் - என்றும் பலவாகக் கூறப்பட்டன.

ஆகவே பெயர் மற்றும் ரூபம் ஆகியவற்றைக் கொண்டு வேறுபடுத்திக் காணப்பட வேண்டிய ப்ரத்யகாத்மாக்களுக்கு, பெயர் மற்றும் ரூபம் ஆகியவற்றை ஏற்படுத்துவது, அவற்றைக் காட்டிலும் வேறுபட்ட, இந்த ஆகாசம் எனப்படும் பரப்ரஹ்மமே ஆகிறது. இதனையே சாந். (8-14-1) – தே யதந்தரா - அவற்றின் நடுவில் - என்று விளக்கியது. அதாவது, எந்த ஒரு காரணத்தினால் ஆகாசமானது பெயர் மற்றும் உருவம் ஆகிய இரண்டிற்கும் நடுவில் இருந்தபடி, அவற்றால் தீண்டப்படாமல் (அதாவது மாறுபாடு அடையாமல்), தனியான ஒரு வஸ்துவாக உள்ளதோ, அதே காரணத்தால் அந்த ஆகாசமே (ப்ரஹ்மமே) பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்துவதாக உள்ளது. அதாவது ப்ரஹ்மத்திற்கு இயல்பாகவே பாபங்கள் அற்ற தன்மை, ஸத்யஸங்கல்பம் போன்றவை உள்ளதால், அதுவே இவ்விதம் நிர்வாகம் செய்கிறது என்று கருத்து. ஸூத்ரத்தில் உள்ள “ஆதி” (அர்த்தாந்தரத்வாதி = அர்த்தாந்தரத்வ + ஆதி) என்ற விகுதி முலம் ப்ரஹ்மமாக உள்ள தன்மை, அனைத்திற்கும் ஆத்மாவாக உள்ள தன்மை, அமிர்தமாக உள்ள தன்மை போன்றவை கூறப்பட்டன. எந்தவிதமான காரணமும் இன்றி, அனைத்தையும் விட மேன்மையாக இருத்தல் போன்ற தன்மைகள், பரமாத்மாவிற்கு மட்டுமே ஸம்பவிக்கும். ஆகவே இங்கு கூறப்பட்ட ஆகாசம் என்பது பரப்ரஹ்மமே ஆகும்.

சாந். (8-13-1) – தூத்வா சரீரம் – சரீரத்தை விட்டு – என்று கூறப்படுவதால், இந்தப் பகுதியில் முக்தாத்மாவே கூறப்படுகிறான் என்று உரைப்பது சரியல்ல. காரணம், சாந். (8-13-1) – ப்ரஹ்மலோகம் அபி ஸம்பவாமி - ப்ரஹ்மலோகத்தை அடைவேனாக - என்பதில் பரப்ரஹ்மமே பேசப்படுகிறது; ஆகவே இந்தப் பகுதியானது ப்ரஹ்மத்தைக் குறித்தே உள்ளது. இங்கு சென்று அடைபவன்

முக்தாத்மா என்றும், சென்று அடையப்படுவது பரப்ரஹ்மம் என்றும் கூறப்பட்டுள்ளது; இவ்விதம் சென்று அடைகின்ற முக்தாத்மாவால், பெயர் மற்றும் உருவம் ஆகியவற்றை ஏற்படுத்துதல் இயலாது; ஆகவே, இவற்றைச் செய்பவன், சென்று அடையப்படுகின்ற பரப்ரஹ்மமே என்றாகிறது.

மேலும் இந்த "ஆகாசம்" என்ற பதமானது, நமக்குத் தஹராகாசத்தை குறித்த நினைவை இங்கு ஏற்படுத்துவதாலும், (பூர்வபக்ஷத்தில் கூறப்பட்ட) ப்ரஜாபதி வாக்கியமானது உபாஸகனுடைய ஸ்வரூபத்தைக் கூறுவதாலும், தஹராகாசமே உபஸிக்கப்பட வேண்டியது என்றும், அதுவே அடையப்படவேண்டியது என்றும் ஆகிறது; இவ்விதம் கூறுவதே சரியானதாகும். "ஆகாசம்" என்ற பதமானது எந்த இடத்திலும் ப்ரத்யகாத்மாவைக் குறிப்பதாகக் காணப்படவில்லை. ஆகவே இங்குள்ள "ஆகாசம்" என்பது பரப்ரஹ்மமே ஆகும்.

**பூர்வபக்ஷம்** - ப்ரத்யகாத்மாவைத் தவிர்த்து வேறு எந்த ஆத்மாவும் கூறப்படவில்லை; காரணம், இந்த இரண்டிற்கும் (பரமாத்மா மற்றும் ப்ரத்யகாத்மா) ஐக்யம் கூறப்படுவதாலும், த்வைதத்தன்மையை (இரண்டாக உள்ள தன்மை) தடுப்பதாலும், இவ்விதமே கொள்ளவேண்டும். சுத்தமான நிலையில் (முக்தாத்மா) உள்ள ப்ரத்யகாத்மாவே "பரமாத்மா, பரப்ரஹ்மம், பரமேச்வரன்" என்றெல்லாம் கூறப்படுகிறான். ஆகவே, அடைபவனாகிய முக்தாத்மா என்பவனைக் காட்டிலும் வேறுபட்டதும், அடையப்படவேண்டியதும் ஆகிய ப்ரஹ்மலோகம் என்று தனியாக ஏதும் இல்லை (அதாவது அவனே ப்ரஹ்மலோகம், ஆகாசம் ஆகிறான்). எனவே அந்த முக்தாத்மாவே, பெயர் மற்றும் ரூபங்களை ஏற்படுத்தவல்ல ஆகாசம் எனப்படுகிறான். இதற்கான பதிலை அடுத்து ஸூத்ரம் கூறுகிறது.

தென்னரங்கன் திருவடிகளே சரணம்
தென்னரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்த இராமாநுசன் திருவடிகளே சரணம்

... தொடரும்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீவேதாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்

(பகுதி – 285)

## ப்ரபந்நனுக்கு அனைத்து பாபங்களும் நீங்கும் முறை

**மூலம்** – இவனுக்கு இப்படிப் புண்யபாப ரூபமான ஸம்ஸார காரணம் கழியும் க்ரமம் எது என்னில், உபாய விரோதிகள் முன்பே ஸ்வஹேதுக்களாலே கழிந்ததால், ப்ராரப்தேதரங்களாய்ப் ப்ராப்தி விரோதிகளாகவல்ல பூர்வ புண்யபாபங்கள் உபாயாரம்பத்திலே நிச்சேஷமாகக் கழியும். உத்தரங்களான பாபங்களில், புத்தி பூர்வமல்லாதவையும் தேச கால வைகுண்யாதிகளால் வருமவையும் ஒன்றும் லேபியாது. உபாயத்தில் புத்திபூர்வ உத்தராகங்கள் ஸ்வ அதிகார அநுகுண ப்ராயச்சித்த விசேஷத்தாலேயாதல், சிக்ஷார்த்தமான லகு பலவிசேஷத்தாலேயாதல் தீரும். ப்ரபந்நனுக்குப் ப்ராரப்தத்தில் இசைந்த காலத்துக்குள்ளே விபக்வமாம் கர்மாம்சம் அநுபவத்தாலும், அவாந்தர ப்ராயச்சித்தத்தாலும் நாச்யம். மேலுள்ளதும் உபாய மாஹாத்ம்யத்தாலே கழியும். உபயபாவநா க்ரமத்தாலே வந்த புத்தி பூர்வ உத்தர புண்யங்களில் ப்ரதிபந்தமில்லாதவையும் உபாஸகனுக்கு வித்யா அநுகுண பூர்வோத்தர புண்யங்களும் பலப்ரதாநத்தாலே கழியும். வித்யைக்கு அநுபயுக்த புத்திபூர்வ உத்தர புண்யங்களில், ப்ரதிபத்த பலங்களும், வித்யோபயுக்த பூர்வோத்தர புண்யங்களில் அநுகூல ப்ரதிகூல ப்ரபல கர்மாந்தர பலங்களாலே, நிருத்த அவஸரங்களாய் பலம் கொடுக்கப் பெறாதே மிகுதியாய் நின்றவையும் அந்திமகாலத்திலே கழியும். இவ்வர்த்தம் "இதரஸ்ய அபி ஏவம் அஸம்ச்லேஷ: பாதே து" என்கிற ஸூத்ரத்திலே அபிப்ரேதம்.

**விளக்கம்** – ஒரு ப்ரபந்நனுக்கு இவ்விதமாகப் புண்ணியம் மற்றும் பாபங்கள் கழிகின்ற முறை என்ன? உபாயத்தைக் கைக்கொள்ள இயலாமல் தடுக்கின்ற தடைகள் அனைத்தும் அவைகளுடைய காரணங்களால் கழிவதால் (உதாரணமாக தகுந்த உபதேசம் முதலானவை), உபாயமான ப்ரபத்தியைக் கைக்கொள்வதற்குத் தடையாக உள்ளதும், முன்பே உள்ளதும், பலன் அளிக்கத் தொடங்காதவையாக உள்ளதும் ஆகிய புண்ணிய பாபங்கள் அனைத்தும், உபாயத்தைக் கைக்கொள்ளத் தொடங்கியவுடனேயே, மீதம் ஏதும் இல்லாமல் கழிகின்றன. ப்ரபத்திக்குப் பின்னர் இடம் மற்றும் காலம் ஆகியவை காரணமாகவும், புத்தி அறியாமல் செய்ததாகவும் உள்ள பாபங்கள் எதுவும் ப்ரபந்நனிடம் சேராது. ப்ரபத்திக்குப் பின்னர் புத்தி அறிந்து செய்யப்படும் பாபங்கள் அனைத்தும் அவரவர்களுடைய சக்திக்கு ஏற்ப செய்யப்படும் ப்ராயச்சித்தங்களுடைய சிறப்பு மற்றும் பலன்களை அனுபவித்தல் என்னும் வடிவில் வருவதான சிறிய அளவில் கிடைக்கின்ற தண்டனைகள் மூலமாகக் கழிகின்றன. இந்தச் சரீரம் தீரும்வரை ப்ரபந்நனால் ஏற்றுக் கொள்ளப்பட்டவையும், பலன் அளிக்கத் தொடங்கியவையும் ஆகிய கர்மங்கள் அனைத்தும், அவற்றின் பலன்களை அனுபவிப்பதன் மூலமும், தகுந்த ப்ராயச்சித்தம் மூலமும் அழிகின்றன. பலன் அளிக்கத் தொடங்கிய கர்மங்களும், ப்ரபத்தியின் மேன்மையால் அழிகின்றன. ப்ரபத்தியைக் கைக்கொள்வதற்கு முன்பும் பின்பும், மோக்ஷம் மற்றும் ஸம்ஸாரம் ஆகிய இரண்டைக் குறித்தும், புத்தி அறிந்து செய்த புண்ணிய கர்மங்களால் உண்டாகும் பலன்களில், மோக்ஷத்திற்கு (அல்லது ப்ரபத்திக்கு) தடையாக இல்லாதவையும், உபாஸகனுடைய வித்யைக்குப் பலம் சேர்ப்பவையாக உள்ளவையும், பலன் அளித்தவுடன் மறைகின்றன. ஒரு சில புண்ணியங்கள், உபாஸனைக்குப் பின்னரும் முன்னரும் செய்யப்பட்டவையாக இருந்து, அவை வித்யைக்கு உபயோகமாக இல்லாமலும், இதுவரை பலன்கள் ஏதும் அளிக்காமலும் இருக்கலாம்; ஒரு சில புண்ணியங்கள், உபாஸனைக்குப் பின்னரும் முன்னரும் செய்யப்பட்டவையாக இருந்து, அவை வித்யைக்கு உபயோகமாக உள்ளபோதிலும், உபாஸனையில் உள்ள மற்ற கர்மங்களின் வலிமை காரணமாகத் தாங்கள் பலன் அளிப்பதற்கு ஏற்ற காலம் இல்லாததால், பலன் அளிக்காமல் இருக்கலாம்; இது போன்று மீதம் உள்ள பலன்கள் அனைத்தும் இறுதி நேரத்தில் நீங்கிவிடும். இந்தக் கருத்தானது ப்ரஹ்மஸூத்ரம் (4-1-14) -

இதரஸ்ய அபி ஏவம் அஸம்ச்லேஷ: பாதே து - புண்ணியங்களுக்கும் அதே போன்று, சரீரம் நீங்கும் நேரத்தில் – என்பதில் கூறப்பட்டது.

தூப்புல் பிள்ளை திருவடிகளே சரணம்

... தொடரும்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீரங்கநாச்சியார் ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ஸ்வாமி அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்த

# ஆசார்ய ஹ்ருதயம்

இதற்கு ஸ்வாமி மணவாள மாமுனிகள் அருளிச் செய்த வ்யாக்யானம்
(பகுதி – 105)

**வ்யாக்யானம் –** [8] (திருவிக்கிரமனாகக் குறள் கோலப் பிரானாய் அடியை மூன்றையிரந்தவன் கள்வன் கண்முகப்பே யகல்கொள் திசை வையம் விண்ணும் தடவந்த தடந்தாமரைகளை) "லோக விக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ" என்று வஸிஷ்ட சண்டாள விபாகமற வரையாதே திருவடிகளை வைக்கையாலே ஸௌசீல்யமும் உறங்குகிற ப்ரஜையின் முதுகைக் கட்டிக் கொண்டு கிடக்கும் தாயைப் போலே விமுகரானார் தலையிலும் திருவடிகளை வைக்கையாலே வாத்ஸல்யமும், அவதரித்து முன்னே நின்று கார்யம் செய்கையாலே ஸௌலப்யமும், "தே" என்கையாலே தன் பேறாகச் செய்கைக்குறுப்பான ஸ்வாமித்வமும், "விபோ" என்கையாலே ஜ்ஞாந சக்த்யாதி குணபூர்த்தியும் சொல்லுகையாலே, த்ரிவிக்ரமாப தாநத்திலே ஆச்ரயணோபயோகியாயும் கார்யோபயோகியாயுமுள்ள குணங்களெல்லாம் ப்ரகாசிக்கையாலே, "தெய்வநாயகன் நாரணன் திரிவிக்கிரமன்", "மாண்குறள் கோலப்பிரான்", "அடியை மூன்றையிரந்தவாறும்", "மின்கொள் சேர் புரிநூல் குறளாயகல் ஞாலங்கொண்ட வன்கள்வன்" என்று ஸர்வேச்வரனாய் ஆச்ரித வத்ஸலனான தான், த்ரிவிக்ரமாபதாநம் பண்ணுகைக்காக பெருவிலையனானவழகைச் சிறாங்கித்தநுபவிக்கலாம்படி வாமந வேஷத்தைப் பரிக்ரஹித்துக் கொண்டு மஹாபலி யஜ்ஞவாடத்திலே சென்று, "மூன்றடி" என்றிரந்து, தான் சொன்னபடியே அவன் செய்யும்படி விநீதமாய் ஆகர்ஷகமான வடிவைக் காட்டி வசீகரித்து நின்ற மஹா வஞ்சகன், "காண்மின்களுலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்த" என்று நோக்குவித்யை காட்டுவாரைப்போலே இதோராச்சர்யம் பாருங்கோளென்று லௌகிகரெல்லாருடையவும் கண்ணெதிரே, "அகல் கொள் வையமளந்த மாயன்", "திசை ஞாலந்தாவியளந்ததும்", "வையமளந்த மணாளன்", "மண்ணும்

விண்ணுங்கொண்ட மாயவம்மான்", "ஓரடியாலெல்லாவுலகும் தடவந்த", "தாவி வையங் கொண்ட தடந்தாமரைகள்" என்று விஸ்த்ருதமாய் திக்குக்களோடே கூடின பூமியையும் உபரிதந லோகங்களையும், தென்றலுலாவினாப்போலே ஸுககரமாம்படி யெங்குமொக்கப் பரப்பியளந்து கொண்ட ஸர்வ ஸுலபமாய் நிரதிசய போக்யமான திருவடிகளை.

**விளக்கம்** – (திருவிக்ரமனாக) - லோக விக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ - அனைத்து லோகங்களையும் அளந்த உனது திருவடிகளைச் சரணம் புகுந்தேன் - என்பதற்கு ஏற்ப, உயர்ந்தவன் மற்றும் சண்டாளன் என்னும் வேறுபாடுகள் ஏதும் ஆராயாமல் அனைவரது தலைகளிலும் திருவடிகளை வைத்ததால் சௌசீல்யமும், உறங்கும் குழந்தையின் முதுகைக் கட்டி அணைத்தபடி உள்ள தாய் போன்று தன்னிடம் பக்தி இல்லாதவர்கள் தலைகளிலும் திருவடிகளை வைத்ததால் வாத்ஸல்யமும், அவதாரம் எடுத்து முன்னே நின்று செயல்கள் செய்ததால் ஸௌலப்யமும், "தே" என்பதால் தனது பேறு என்று எண்ணிச் செயல்கள் செய்வதற்குக் காரணமாக உள்ள ஸ்வாமித்வமும், "விபோ" என்பதால் ஞானம் மற்றும் சக்திகளின் பரிபூர்ணத்வ நிலையையும் கூறுவதால், த்ரிவிக்ரமன் தனது செயல்களில் ஈடுபட்டு நிற்பதற்குக் காரணமாகவும், அந்தச் செயல்களைச் செய்வதற்குத் துணையாகவும் உள்ள கல்யாணகுணங்கள் அனைத்தும் வெளிப்படுவதால் திருவாய்மொழி (5-7-11) - தெய்வநாயகன் நாரணன் திரிவிக்கிரமன் – என்றும். (குறள் கோலப்பிரானாய்) - திருவாய்மொழி (5-9-6) - மாண்குறள் கோலப்பிரான் - என்றும். (அடியை மூன்றை இரந்த) - திருவாய்மொழி (5-10-9) - அடியை மூன்றையிரந்தவாறும் – என்றும். (வன் கள்வன்) – திருவாய்மொழி (6-1-11) – மின்கொள் சேர் புரிநூல் குறளாயகல் ஞாலங்கொண்ட வன்கள்வன் – என்றும் கூறுவதற்கு ஏற்ப ஸர்வேச்வரனாகவும், அடியார்களிடம் மிகுந்த வாத்ஸல்யம் கொண்டவனாகவும் உள்ள தான், த்ரிவிக்ரமனாக நின்று செய்கின்ற செயலைச் செய்வதற்காக, நீண்டு நெடியவனாக நின்ற தன்னுடைய அழகைச் சிறியதாக அனுபவிக்கலாம்படி ஒரு வாமன வேஷத்தை கைக்கொண்டு, மஹாபையின் யாகசாலைக்குச் சென்று, "மூன்றடி" என்று யாசித்து, தான் எண்ணியபடியே மஹாபலி செய்யும்படியாக, மிகவும் எளிமையாகவும் வசீகரிக்கும்படியாகவும் உள்ள தனது வடிவத்தைக் காண்பித்து அவனை வசீகரித்து நின்ற மஹாவஞ்சகன். (கண்முகப்பே) – திருவாய்மொழி (6-3-11) – காண்மின்கள்

உலகீர் என்று கண்முகப்பே நிமிர்ந்த – என்பதற்கு ஏற்ப இந்த்ரஜால வித்யை காண்பித்து மயக்குபவன் போன்று, “இதோ! ஓர் ஆச்சர்யம் காண்பீராக” என்று உலகில் உள்ள அனைவருடைய கண்களுக்கு முன்பாகவும். (அகல்கொள்) - திருவாய்மொழி (6-4-6) - அகல் கொள் வையமளந்த மாயன் – என்றும். (திசை) - திருவாய்மொழி (6-533) – திசை ஞாலம் தாவியளந்ததும் - என்றும். (வையம்) - திருவாய்மொழி (6-6-1) – வையம் அளந்த பிரான் - என்றும். (விண்ணும்) - திருவாய்மொழி (6-9-2) – மண்ணும் விண்ணும் கொண்ட மாய அம்மான் – என்றும். (தடவந்த) - திருவாய்மொழி (6-9-6) – ஓரடியாலெல்லாவுலகும் தடவந்த - என்றும். (தடந்தாமரை) - திருவாய்மொழி (6-9-9) – தாவி வையங் கொண்ட தடந்தாமரைகள் - என்றும் கூறுவதற்கு ஏற்ப விரிவைக் கொண்டதாகவும், அனைத்து திசைகளுடன் கூடிய பூமியையும் மேல் லோகங்களையும், தென்றல் வீசுவது போன்று இனிமையாக உள்ளதாக எங்கும் ஒரே போன்று பரப்பி அளந்து எடுத்துக் கொண்ட மிகவும் எளியதான எல்லையற்ற இனிமை உள்ள திருவடிகளை.

**வ்யாக்யானம்** – [9] (இணைத்தாமரைகள் காண விமையோரும் வரும்படி சென்று சேர்ந்தவுலகத் திலதத்தே கண்டு) “எந்நாளே நாம் மண்ணளந்தவிணைத் தாமரைகள் காண்பதற்கென்று” இத்யாதிப்படியே திருவுலகளந்தருளின, ஸர்வஸுலபமாய் நிரதிசய போக்யமாய் சேர்த்தியழகையுமுடைத்தான திருவடிகளை நாம் காண்பதெப்போதோ வென்று நித்யஸூரிகளுமநுபவிக்க வாசைப்பட்டு வரும்படி, “அன்று ஞாலமளந்தபிரான் பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை” என்று திருவுலகளந்தருளின் செயலாலே ப்ரகாசிக்கிற ஸர்வஸ்மாத் பரத்வத்தையுடையவன், அந்த சிரமம் தீர, விடாயர் மடுவிலே சேருமாப்போலே உகந்து நிற்கிற “திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடம்” என்று லோகத்துக்கு முக்கியாபரணமான திருமலையிலே கண்டு. (அகலகில்லேனென்று பூர்வவாக்ய மநுஸந்தித்தவர்) “அகலகில்லே னிறையுமென்றலர்மேல் மங்கையுறை மார்பா” என்று புருஷகார பூதையான பெரியபிராட்டியாரை முன்னிட்டு, “நிகரில் புகழாய்” என்று தொடங்கி “திருவேங்கடத்தானே” என்னுமதளவாக வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம் ஸௌலப்யமாகிற குணங்களை அடைவே அநுஸந்தித்துக் கொண்டு “புகலொன்றில்லா” என்றும், “அடியேன்” என்றும் தம்முடைய ஆகிஞ்சந்யாநந்யகதித்வ புரஸ்ஸரமாக “உன்னடிக்கீழ்” என்று “சரணௌ” என்கிற திருவடிகளையும், “அமர்ந்து புகுந்தேன்” என்று “சரணம்

ப்ரபத்யே" என்கிற அர்த்தத்தையும் அநுஸந்தித் தருளுகையாலே, பூர்வவாக்ய ப்ரக்ரியையாலே பூர்ணப்ரபதநம் பண்ணினவர்.

**விளக்கம்** – (இணைத்தாமரைகள் காண இமையோரும் வரும்படி) - திருவாய்மொழி (6-10-6) - "எந்நாளே நாம் மண்ணளந்தவிணைத் தாமரைகள் காண்பதற்கென்று - என்பது போன்று, "திருவுலகங்கள் அனைத்தும் அளந்தருளியதும், மிகவும் எளியதாகவும், எல்லையற்ற இனிமை கொண்டதாகவும், ஒன்றுக்கொன்று பொருந்தியதாகவும் உள்ள திருவடிகளை நாம் காண்பது எப்போதோ?" என்று நித்யஸூரிகளும், அனுபவிக்க ஆசை கொண்டு வரும்படியாக உள்ள திருவடிகளை. (சென்று சேர்ந்த) - திருவாய்மொழி (3-3-8) – அன்று ஞாலமளந்தபிரான் பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை – என்பதற்கு ஏற்ப அனைத்து லோகங்களையும் அளந்தருளிய செயல் மூலமாக வெளிப்படுவதான "அனைத்திற்கும் ஆத்மாவாக, அனைத்தைக் காட்டிலும் உயர்ந்த தயையைக் கொண்டவன்" என்னும்படி உள்ள அவன், தனது அத்தகைய உலகளந்த சிரமம் தீரும்விதமாக, அதிக தாகம் கொண்டவர்கள் மடுவை நோக்கி ஓடுவது போன்று, மகிழ்ந்து நிற்கின்ற. (உலகம் திலதத்தே கண்டு) – திருவாய்மொழி (6-10-1) - திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடம் – என்பதற்கு ஏற்ப உலகத்தின் முக்கியமான ஆபரணமாக உள்ள திருவேங்கடத்திருமலையில் கண்டு. (அகலகில்லேன் என்று பூர்வ வாக்கியம் அநுஸந்தித்தவர்) – திருவாய்மொழி (6-10-10) – அகலகில்லேனிறையுமென்றலர்மேல் மங்கையுறை மார்பா - என்று சிபாரிசு செய்யும் நிலையில் உள்ளவளாகிய பெரியபிராட்டியாரை முன்னே நிறுத்திக் கொண்டு, திருவாய்மொழி (6-10-10) – நிகரில் புகழாய் – என்று தொடங்கி, திருவாய்மொழி (6-10-10) - திருவேங்கடத்தானே – என்று முடிப்பது முடிய உள்ள வரிகளில் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் போன்ற குணங்களை முழுவதுமாக எண்ணியபடி, திருவாய்மொழி (6-10-10) – புகல் ஒன்றில்லா - என்பதன் மூலம் தனது கைம்முதல் ஏதும் இல்லாத நிலையையும், திருவாய்மொழி (6-10-10) - அடியேன் - என்று கூறுவதன் மூலம் வேறு கதியின்றி உள்ள நிலையையும் உரைத்து, "சரணௌ" என்றுள்ள பொருள் வெளிப்படும்படியாக உள்ள திருவடிகளை, திருவாய்மொழி (6-10-10) - உன்னடிக் கீழ் - என்று கூறி, "சரணம் ப்ரபத்யே" என்பதைத் திருவாய்மொழி (6-10-10) - அமர்ந்து புகுந்தேன் – என்று உரைத்தார். இப்படியாக இந்தக் கருத்துக்களை எண்ணியபடி இந்தப்

பாசுரத்தை உரைத்ததால், இதன் மூலம் த்வயத்தின் முதல் வாக்கியத்தில் கூறப்பட்ட பரிபூர்ணமான ப்ரபத்தியைக் கைக்கொண்டவர்.

**வ்யாக்யானம்** - [10] (பிணக்கறத் தொடங்கி வேதப்புனிதவிறுதி சொன்ன ஸாத்யோபாய ச்ரவண ஸசோக ஸஜாதீயர்க்கு) "பத்துடையடியவரி"லே, "பிணக்கற வறுவகைச் சமயமும்" என்கிற பாட்டிலே, "வணக்குடைத் தவநெறி வழி நின்று" என்றுபக்ரமித்து, "வேதப் புனித விருக்கை நாவில் கொண்டு ஞானவிதி பிழையாமே அச்சுதன் தன்னை மேவித் தொழுதுய்ம்மினீர்கள்" என்கிறதளவாக கீழுபதேசித்த ஸாத்ய ஸாதந பக்தி ச்ரவணத்தாலே அதினுடைய துச்சகத்வ ஸ்வரூப விரோதித்வங்களை நினைத்துப் பிறந்த சோகத்தோடே கூடி, அத்தாலே "எய்தக் கூவுதலாவதேயெனக்கு", "என்னான் செய்கேன்" என்றிருக்கும் தம்மோடு ஸஜாதீயராம்படியான அதிகாரம் பிறந்தவர்களுக்கு.

**விளக்கம்** – ( பிணக்கறத் தொடங்கி) - திருவாய்மொழி (1-3) – பத்துடை அடியவர் - என்பதில் உள்ளதான திருவாய்மொழி (1-3-5) – பிணக்கற அறுவகைச் சமயமும் - என்னும் பாசுரத்தில், திருவாய்மொழி (1-3-5) – வணக்குடைத் தவநெறி வழி நின்று – என்று தொடங்கி, (வேதப் புனித இறுதி சொன்ன) - திருவாய்மொழி (5-2-9) – வேதப் புனித விருக்கை நாவில் கொண்டு ஞானவிதி பிழையாமே அச்சுதன் தன்னை மேவித் தொழுதுய்ம்மினீர்கள் - என்பது முடிய உபதேசித்த. (ஸாத்ய உபாய ச்ரவண ஸசோக ஸஜாதீயர்க்கு) - ஸாத்ய ஸாதன பக்தி குறித்துக் கேட்டதன் காரணமாக, அந்தப் பக்தியைக் கைக்கொள்வதில் உள்ள கடினத்தையும், அது ஸ்வரூபத்திற்கு விரோதமாக உள்ள தன்மையும் எண்ணிப் பார்ப்பதால் ஏற்பட்ட சோகத்துடன் நின்று, அதன் விளைவாகத் திருவாய்மொழி (5-7-5) - எய்தக் கூவுதலாவதேயெனக்கு – என்றும், திருவாய்மொழி (5-8-3) – என் நான் செய்கேன் – என்றும் உள்ள, தமக்கு ஒற்றுமையான அதிகாரம் ஏற்பட்டவர்களுக்கு.

**வ்யாக்யானம்** - [11] (தந்தனன் மற்றோர் களைகணிலம் புகுந்தேனென்று ஸ்வஸித்தோபாய நிஷ்டையை உக்த்யநுஷ்டாநங்களாலே காட்டுகிறார் ஆறாம்பத்தில்) அதாவது, "தந்தனன் தனதாள் நிழல்", "திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்களன்றி மற்றோர் களைகணிலங் காண்மின்களே" என்கிற

தம்முடைய உக்தியாலும், “அடிக்கீழமர்ந்து புகுந்தேன்” என்கிற தம்முடைய அநுஷ்டாநத்தாலும் தமக்கிந்த ஸித்தோபாயத்திலுண்டான நிஷ்டையை ப்ரகாசிப்பித்தார் ஆறாம் பத்திலென்கை.

**விளக்கம்** - (தந்தனன்) – திருவாய்மொழி (6-3-9) - தந்தனன் தனதாள் நிழல் – என்றும், திருவாய்மொழி (6-3-10) - திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்களன்றி மற்றோர் களைகணிலங் காண்மின்களே - என்றும் உள்ள தம்முடைய சொற்கள் மூலமாகவும்; திருவாய்மொழி (6-10-10) – அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன் - என்றும் உள்ள தனது செயலாலும், தனக்கு இந்த ஸித்தோபாயமாக உள்ள ஸர்வேச்வரன் விஷயத்தில் உண்டான நிஷ்டையை, ஆறாம் பத்து மூலமாக வெளிப்படுத்துகிறார்.

ஸ்வாமி மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

ஸ்வாமி அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்

...தொடரும்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ப்ரபந்நஜந கூடஸ்தரான ஸ்வாமி நம்மாழ்வார் அருளிச் செய்த

# திருவாய்மொழி

இதற்கு ஸ்வாமி வடக்குத் திருவீதிப் பிள்ளை அருளிச் செய்த
முப்பத்தாறாயிரப்படி என்னும் ஈடு வ்யாக்யானம்
மூலமும், எளிய தமிழ்நடையும்
(பகுதி – 250)

## திருவாய்மொழி நான்காம் பத்து

### திருவாய்மொழி நான்காம் பத்து முதல் திருவாய்மொழி
### "ஒரு நாயகமாய்" ப்ரவேசம்

**வ்யாக்யானம் -** த்வயத்தில் உத்தரகண்டாரத்தத்தை அருளிச்செய்தார், கீழ் மூன்று பத்தாலும். இனி மேல் மூன்று பத்தாலும், அதில் பூர்வகண்டார்த்தத்தை அருளிச் செய்கிறார். கீழ் மூன்று பத்தாலுஞ் சொன்ன புருஷார்த்தத்துக்கு உபாயத்தை அடியில் அறுதியிடுகிறார். இவ்வடி அறியாதாரிறே உபாயாந்தரங்களாகிற விலக்கடிகளில் போகிறவர்கள். இவர்க்கு நிரவதிக ப்ரீதியோடேயிறே, கீழில் திருவாய்மொழியிற் சென்றது. தாமும் குறைவற்று, பற்றினார் குறையும் தீர்க்கவல்லராம்படி யிருந்தார் கீழ். ஸம்ஸாரிகளைப் பார்த்து, "நீங்கள் பற்றின விஷயங்கள் தண்ணிதான பின்பு, அவற்றை விட்டு, ச்ரிய:பதியைப் பற்றுங்கோள்" என்று பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார்.

**விளக்கம் -** த்வய மந்த்ரத்தின் இரண்டாவது வரிக்கான ஆழ்பொருளை முதல் மூன்று பத்துக்களாலும் அருளிச்செய்தார். அடுத்து வரும் மூன்று பத்துக்களில், த்வய மந்திரத்தின் முதல் வாக்கியத்திற்கான பொருளை அருளிச்செய்ய உள்ளார். இவற்றில் முதல் மூன்று பத்துக்களில் கூறப்பட்டதான, புருஷார்த்தத்திற்கான

உபாயத்தை இந்தத் திருவாய்மொழியில் அருளிச்செய்கிறார் (அதாவது 4-1ல் அருளிச்செய்கிறார்). இங்குள்ள "அடி" என்பதை "திருவடிகள்" என்று பொருள் கொண்டால், இந்தத் திருவடிகள் குறித்து அறியாதவர்கள், மற்ற உபாயங்களை நாடிச் செல்பவர்கள் ஆகிறார்கள். அளவற்ற ப்ரீதியுடன் அல்லவோ இவர் கடந்த திருவாய்மொழியை அருளிச்செய்தார்? தானும் எந்தவிதமான குறைகளும் இன்றி, தன்னை அடைந்தவர்களுடைய குறைகளையும் தீர்க்க வல்லவராக அருளிச்செய்தார். இந்தத் திருவாய்மொழியில் ஸம்ஸாரிகளிடம், "நீங்கள் அண்டி நிற்கின்ற அனைத்தும் தாழ்ந்ததாக உள்ளதை அறிந்த பின்பு அவற்றைக் கைவிட்டு மஹாலக்ஷ்மியின் நாயகனை அடைவீர்களாக" என்று மற்றவர்களுக்கு உபதேசம் செய்கிறார்.

**வ்யாக்யானம் –** "வீடுமின் முற்ற"த்திலும் பரோபதேசம் பண்ணினார்; "சொன்னால் விரோத"த்திலும் பரோபதேசம் பண்ணினார்; இத்திருவாய்மொழியும் பரோபதேசமா யிருந்தது; இவையெல்லாம்வற்றிலும் எல்லாவர்த்தங்களும் உண்டேயாகிலும், ஒன்றுக்கு ஓரர்த்தத்திலே நோக்காயிருக்கும். "வீடுமின் முற்ற"த்திலே, "இதர விஷய வைராக்ய பூர்வகமாக பகவத் பக்தியைப் பண்ணுங்கோள்" என்றார். இதில் "இவர்கள்தான் இதர ஸ்தோத்ரம் பண்ணுகிறது சில ப்ரயோஜநத்துக்காகவா யிருக்குமிறே" என்று அவற்றினுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷபூயஸ்தையை அருளிச்செய்கிறார்.

**விளக்கம் -** திருவாய்மொழி (1-2) – வீடுமின் முற்றவும் – என்பதில், மற்றவர்களுக்கு உபதேசம் செய்தார்; திருவாய்மொழி (3-9) – சொன்னால் விரோதம் இது - என்பதிலும் மற்றவர்களுக்கு உபதேசம் செய்தார்; இந்தத் திருவாய்மொழியிலும் மற்றவர்களுக்கு ஏன் உபதேசம் செய்கிறார் என்பதற்கு விடை அருளிச்செய்கிறார். இவை அனைத்திலும் "மற்றவர்க்கு உபதேசித்தல்" என்பது ஒன்றாகவே உள்ளபோதிலும், இவை ஒவ்வொன்றிலும் ஆழ்பொருள் என்பது வெவ்வேறாகவே உள்ளது. திருவாய்மொழி (1-2) - வீடுமின் முற்றவும் – என்பதில், "மற்ற விஷயங்கள் அனைத்தையும், வைராக்யத்தை முன்னிறுத்திக் கைவிட்டு, பகவத் பக்தியை அடைவீர்களாக", என்றார். திருவாய்மொழி (3-9) – சொன்னால் விரோதம் - என்பதில், "ஸர்வேச்வரனைத் துதிப்பதற்கு மட்டுமே தகுதி

கொண்டதான உடல் உறுப்புக்களைக் கொண்டு, மற்றவர்களைத் துதித்து நிற்காமல், ஸர்வேச்வரனையே துதித்தபடி இருங்கள்", என்கிறார். இந்தத் திருவாய்மொழியில், "இந்த ஸம்ஸாரிகள் மற்ற விஷயங்களைத் துதித்தல் என்பது ஒரு சில பயனை எதிர்பார்த்தே ஆகும் அல்லவோ?", என்று அந்தப் பயன்களுடைய சிறுமை, நிலையற்ற தன்மை முதலான தோஷங்கள் அதிகமாக உள்ளதை அருளிச்செய்கிறார்.

**வ்யாக்யானம் -** ஐச்வர்யம் அல்பாஸ்திரத்வாதி தோஷத்தை உடைத்தாகையாலே தண்ணிது. ஆத்மலாபம் அபுருஷார்த்தமாய்க் கொண்டு நிலைநிற்குமாகையாலே தண்ணிது; இப்படி ஐச்வர்ய கைவல்யங்களுக்கு உண்டான தண்மையைச் சொல்லி, "ஸர்வேச்வரனாகிறார் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸர்வாபேக்ஷித ப்ரதனாயிருப்பானொருவன்; ஆனபின்பு, அவற்றை விட்டு பகவத் பஜநம் பண்ணப் பாருங்கோள்" என்று இங்ஙனே பகவத் ஸமாச்ரயணத்துக்கு உண்டான நன்மையை உபபாதியா நின்று கொண்டு, பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார்.

**விளக்கம் –** செல்வம் என்பது "மிகவும் தாழ்ந்தது, நிலையற்ற தன்மை கொண்டது" முதலான தோஷங்களைக் கொண்டது என்பதால், மிகவும் இழிந்தது ஆகும். ஆத்மலாபம் என்னும் கைவல்யம் என்பது, புருஷார்த்தம் அல்லாதது என்பதால், இழிந்தது ஆகும். இவ்விதமாக ஐச்வர்யம் மற்றும் கைவல்யம் ஆகியவற்றுக்குள்ள தாழ்ந்த நிலையை உரைத்து, "ஸர்வேச்வரன் அனைத்து திருக்கல்யாணகுணங்களைக் கொண்டவனாகவும், விரும்புகின்ற அனைத்தையும் அளிப்பவனாகவும் உள்ளான். ஆகவே செல்வம், கைவல்யம் போன்றவற்றைக் கைவிட்டு, பகவானைத் துதிக்க முயற்சிப்பீர்களாக", என்கிறார்; இவ்விதம் பகவானைப் பற்றி நிற்பதால் ஏற்படும் நன்மையை விரிவாக உரைத்தபடி, மற்றவர்களுக்கு உபதேசம் செய்கிறார்.

**வ்யாக்யானம் –** இவர்தாம், ஸம்ஸாரிகள் தாந்தராய் வந்து "எங்களுக்கு ஹிதஞ் சொல்ல வேணும்" என்ன சொல்லுகிறாரன்றே; பிராட்டியும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் ராவணனை நோக்கி ஹிதம் சொன்னாற்போலேயிருப்பதொன்றிறே; "ப்ரதீப்தம் சரணம் யதா"; வெந்து அற்ற

க்ருஹத்திலே "ஒரு கம்பாகிலும் கிடைக்குமோ" என்று அவிக்கப் பார்ப்பாரைப் போலே.

**விளக்கம்** – நம்மாழ்வார், தன்னிடம் ஸம்ஸாரிகள் வந்து "எங்களுக்கு ஏற்ற நன்மையை உபதேசம் செய்யவேண்டும்", என்று விண்ணப்பம் செய்த பின்னர் உபதேசிப்பவர் அல்லர். சீதையும், விபீஷணனும் இராவணனுக்குத் தங்களாகவே முன்வந்து நன்மையை உரைப்பது போன்ற தன்மை கொண்டவர் ஆவார். இராமாயணம் யுத்தகாண்டம் (16-22) – ப்ரதீப்தம் சரணம் யதா – என்பதற்கு ஏற்ப, பற்றி எரிகின்ற வீட்டில் "ஒரு கம்பாகிலும் கிடைக்குமோ" என்று பார்ப்பது போன்று, "இவர்களுக்கு ஏற்ற ஒரு சிறிய நன்மையையாவது நான் உரைப்பேன்", என்ற தன்மை கொண்டவர் ஆவார்.

4-1-1 ஒரு நாயகமா யோடவுலகுட னாண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடு காணவிம்மையிலே பிச்சைதாங் கொள்வர்
திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்ம்மினோ

**பொருள்** – ஒரு குடையின் கீழ் தங்களுடைய ஆணைச்சக்கரமானது எந்தவிதமான இடையூறும் இன்றி நீண்ட காலங்கள் செல்லும்படியாக அனைத்து லோகங்களையும் ஒன்றாகப் பொருந்தி ஆட்சி செய்த சக்ரவர்த்திகள், அந்தச் செல்வம் அனைத்தும் பறி போக, வெட்கத்துடன் இரவுப்பொழுது வந்தவுடன் பிச்சை எடுக்கச் செல்லும்போது, அந்த இருளுடன் எந்தவிதமான வேறுபாடும் இன்றி காணப்படும் கருத்த நாயால் கவ்வப்பட்ட கால்கள் கொண்டவர்களாக; உபயோகிக்கத் தகுதியற்ற காரணத்தால் தெருவில் வீசப்பட்ட பானையைத் தங்களுடைய பாத்ரமாகக் கொண்டவர்களாக; தாங்கள் ஆட்சி செய்த நாட்டில் உள்ள அனைவரும் தங்களைக் காணும்படியாக இந்தப் பிறவியிலேயே பிச்சை எடுத்து உண்ணும் செயலை மேற்கொள்வார்கள். ஆகவே, இவ்விதமாக செல்வம் என்பது நிலையற்றது என்பதால், எப்போதும் பெருஞ்செல்வமாக உள்ளவனும், நமது எஜமானனும் ஆகிய ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை, காலம் தாழ்த்தாமல், மனதால் எண்ணியபடி இருந்து பிழைப்பீர்களாக.

**அவதாரிகை** – முதற்பாட்டில், ஸார்வபௌமராய்ப் போந்த ராஜாக்கள் அந்த ராஜ்யஶ்ரீயையிழந்து, இரந்து ஜீவிக்கவேண்டும்படி துர்க்கதராவர்கள்; ஆன பின்பு, "ஶ்ரீவத்ஸ வக்ஷா நித்யஶ்ரீ:" என்கிறபடியே நித்யஶ்ரீயான ஸர்வேச்வரனைப் பற்றப் பாருங்கோள் என்கிறார்.

**விளக்கம்** - அனைத்து லோகங்களையும் ஆண்ட சக்ரவர்த்திகள், தங்களுடைய நாட்டை இழந்து, பிச்சை எடுத்துப் பிழைக்கும்படியான தாழ்ந்த நிலைக்கு வருவார்கள். ஆகவே இராமாயணம் யுத்தகாண்டத்தில் மண்டோதரீ – ஶ்ரீவத்ஸ வக்ஷா நித்யஶ்ரீ: – ஶ்ரீவத்ஸத்தைத் திருமார்பில் கொண்டவனும், நிரந்தரமான செல்வமாக உள்ளவனும் - என்று கூறுவதற்கு ஏற்ப, எப்போதும் உள்ள செல்வமாகிய ஸர்வேச்வரனைப் பற்றி நிற்பீர்களாக என்று முதல் பாசுரத்தில் கூறுகிறார்.

**வ்யாக்யானம்** - (ஒரு நாயகமாய்) நிலைநில்லாத ஐச்வர்யத்தைப் பற்றி நீர்க்குமிழிபோலே உடைந்து போகிற மநுஷ்யர்; "பதிம் விச்வஸ்ய" என்கிற ஈச்வரனுடைய ஐச்வர்யத்தை அநுகரிக்கும்படி சொல்லுகிறதிறே. பௌண்டரக வாஸுதேவனைப் போலே; ஏகாதபத்ரமாக. (ஓட) இப்படி ஆளுவது எத்தனை காலமென்றால், நெடுங்காலம். "அறுபதினாயிரமாண்டு, எழுபதினாயிரமாண்டு" என்கிறபடியே நெடுக. இப்படி நெடுங்காலம் ஆள்வது எவ்வளவென்னில், (உலகு) கடல் சூழ்ந்த பூமிப்பரப்படங்கலும்; "மாந்தாது: க்ஷேத்ரமுச்யதே" என்கிறபடி முந்திரிகை நிலமுடையவனைப் போலேயாயிற்று ஆள்வது. (உடனாண்டவர்) இப்பரப்பில் ஓரிடம் குறை கிடவாதபடி ஆண்டவரென்னுதல்; "அகார்யசிந்தாஸமகாலமேவ ப்ராதுர்ப்பவம்ச்சாபதர: புரஸ்தாத்" என்கிறபடியே பாப சிந்தனை பண்ணினார் முன்பே கையும் வில்லுமாய் நின்று நோக்கிக் கொண்டு போந்த கார்த்தவீர்யார்ஜுநாதிகள் படியைப் பற்றச் சொல்லுதல்.

**விளக்கம்** - (ஒரு நாயகமாய்) - நிலையற்ற செல்வத்தை அண்டி நின்று, நீர்க்குமிழி போன்று உடைந்துவிடும் மனிதர்கள்; தைத்திரீயம் – பதிம் விச்வஸ்ய - இந்த லோகங்களின் அதிபதி - என்பதற்கு ஏற்ப உள்ள ஸர்வேச்வரனுடைய செல்வத்தை

பௌண்ட்ரக வாஸுதேவன் பின்பற்றியது போன்று, போலியாகப் பின்பற்றும் நிலையைக் கூறுகிறார். (ஓட) - இவ்விதம் இவர்கள் ஆட்சி செய்வது எத்தனை காலம் என்றால், நெடுங்காலம். "அறுபதினாயிரம், எழுபதினாயிரம்" என்பது போன்று கொள்க. இந்த நெடுங்காலத்தில் எந்த அளவு ஆள்கிறார்கள் என்றால், (உலகு) - கடலால் சூழப்பட்ட இந்தப் பூமியின் பரப்பு முழுவதும்; ஸ்ரீவிஷ்ணுபுராணம் (4-2-65) – மாந்தாது: க்ஷேத்ரம் உச்யதே – சூரியன் உதித்து மறையும் இடம் முடிய உள்ள அனைத்தும் மாந்தாதா என்பவனின் பூமி ஆகும் - என்பதற்கு ஏற்ப, அற்பமான அளவுள்ள இடத்தை மட்டுமே ஆள்கிறார்கள். (உடன் ஆண்டவர்) - இந்தப் பூமிபரப்பில் ஒரு சிறிய இடம் கூடக் குறையாதபடி ஆட்சி செய்தவர்கள். அகார்யசிந்தாஸமாகாலமேவ ப்ராதுர்ப்பவம்ச்சாபதர: புரஸ்தாத் - பாபங்கள் நிறைந்த செயல்களை எண்ணுபவர்கள் முன்பாகக் கையும் வில்லுமாக நின்று அவர்களை நோக்கியபடியே செல்லும் கார்த்தவீர்யார்ஜுனன் போன்று – என்பதற்கு ஏற்ப ஆண்டவர்கள்.

**வ்யாக்யானம் -** இப்படி ஏகாதிபத்யமாக நெடுநாள் லோகத்தை ஆண்டு போந்தவர்கள் பின்னையென் செய்வர்களென்னில், "ராஜ்யம் நாம மஹாவ்யாதி: அசிகித்ஸ்யோ விநாசந: ப்ராதரம் வா ஸுதம் வாபித்யஜந்தி கலு பூமிபா:" என்கிறபடியே, அவற்றையிழந்து க்லேசிப்பரென்கிறார், மேல். (கருநாய் கவர்ந்த காலர்) இப்படி நெடுநாள் மதிப்போடே ஜீவித்துப் போந்தவன், "எளிமைப்பட்டு ஜவிக்கிறதென்? ஒரு பட்டினி விடுவோம்" என்றிருக்கமாட்டானே; ஜீவிக்கையிலுண்டான நசையாலே பிக்ஷை பண்ணப் பார்க்கும்; முன்பு குறைவற ஜீவித்துப் போந்தவனாகையாலே, பலர் காண வெளியில் புறப்படமாட்டானே; நிலாநாளில் இருட்டுப்புரைகளிலும், இருட்டு நாளிலுமாயிற்றுப் புறப்படுவது; இருள் ஓரிடத்திலே திரண்டாற்போலே கறுத்த நாய்கள் கிடக்கும்; அதறியாதே அவற்றின் வாயிலே காலையிடும்; அவை கடிக்கும்.

**விளக்கம் –** இவ்விதம் நீண்ட நெடுங்காலம் ஒரே குடையின் கீழ் இந்த லோகங்கள் அனைத்தையும் ஆண்டவர்கள், பின்னர் என்ன செய்தார்கள்? ராஜ்யம் நாம மஹாவ்யாதி: அசிகித்ஸ்யோ விநாசந: ப்ராதரம் வா ஸுதம் வாபித்யஜந்தி கலு பூமிபா: – இராஜ்யம் என்பது ஒரு பெரும் நோய்; அதற்கு வைத்தியம் பார்க்க

இயலாது; அந்த நோய் காரணமாக சகோதரனையும் புத்திரனையும் கூட இழக்கிறார்கள் - என்பதற்கு ஏற்ப, அவற்றை இழந்து துன்பம் அடைகிறார்கள். (கருநாய் கவர்ந்த காலர்) - இவ்விதம் மிகுந்த மதிப்புடன் இருந்த ஒருவன், "நாம் ஏன் தாழ்ந்த நிலையில் பிழைக்கவேண்டும்? ஒரு நாளிலாவது பட்டினியுடன் இருப்போம்", என்று இருக்கமாட்டான். வாழ வேண்டும் என்ற ஆசை காரணமாக அவன் பிச்சை எடுத்து உண்ண முயல்வான். ஆனால் முன்பு எந்தவிதமான குறையும் இன்றி வாழ்ந்தவன் என்பதால், பலரும் காணும்படிப் பிச்சை எடுக்கப் புறப்படமாட்டான். நன்கு நிலவின் ஒளி உள்ள நாட்களில் இருண்ட கஇடங்களிலும் அல்லது அமாவாசைகளிலோ புறப்படுவான். அப்போது இருள் முழுவதும் ஒரே இடத்தில் திரண்டு கிடப்பது போன்று கறுத்த நாய்கள் வீதிகளில் இருக்கும். அவை கிடப்பது அறியாமல் அவற்றின் வாயில் இவன் தனது கால்களை வைக்க, அவை அவனைக் கடிக்கும்.

**வ்யாக்யானம்** - (கருநாய்) கருமை - சீற்றமாய், வெட்டிய என்னவுமாம். (கருநாய்) கருவையுடைத்தான நாய்; குட்டியிட்ட நாய் என்றும் குட்டியைக் காத்துக் கிடக்கிறதாகையாலே, "அதுக்கு ஏதேனும் தீங்கு வருகிறதோ?" என்று கண்டாரை ஓடிக் கடிக்குமே. அத்தைச் சொல்லுதல். (காலர்) "வீரக்கழலிட்ட கால்" என்றிறே முன்பு நிரூபிப்பது; இப்போது "நாய் கடித்த கால்" என்றாயிற்றுச் சொல்லுவது. (சிதைகிய பானையர்) கண்டவிடமெங்கும் பொளிந்து உபயோக யோக்யமன்றிக்கே போகட்டுக் கிடந்ததொன்றை எடுத்துக்கொள்ளும். முன்பு பொற்கலத்திலே ஜீவித்தவன், இப்போது ஒரு புத்தோடு கிடையாதபடியாயிற்று. இட்டது உண்டாகில் ஒரு மூலையிலே கீழே போம்படியாயிற்று இருப்பது. (பெருநாடு காண) முன்பு பச்சை கொண்டு வந்தவர்கள் ஓராண்டு, ஆறுமாசமும் உள்ளும் புகப்பெறாதே நின்று உலருமித்தனையிறே; அதுக்கும் போர இப்போது தடையற்று இருந்ததே குடியாகக் காணும்படியாக. முன்பு போர ஜீவித்து எளிமைப்பட்டவனாகையாலே எல்லாருங் காண வருவர்களே. இப்படிச் செய்வது ஒரு ஜந்மம் ஜீவித்து மற்றொரு ஜந்மத்திலேயொவென்னில், (இம்மையிலே) அப்படி ஜீவித்த இந்த ஜந்மந்தன்னிலே; (பிச்சை) முன்பு ராஜாக்களுக்கு ராஜ்யம் வழங்கினானாயிறே போருவது; இப்போது ஒரு பிக்ஷை மாத்ரமேயாயிற்று இவன் அபேக்ஷிப்பது. (தாம் கொள்வர்) முன்பு ராஜாக்கள் கொண்டு வந்த பச்சை

ஆளிட்டிறே வாங்குவது, சிலரிடக் கொண்டாராகாமைக்கு; இப்போது இடுகிறவர்கள்பக்கல் நினைவின்றிக்கே பாதி ஸம்வாதமே உள்ளது.

**விளக்கம்** - (கருநாய்) - சீற்றமாய் உள்ள நாய். அல்லது "கருநாய்" என்பதற்கு "கருவையுடைய நாய்"; குட்டிகள் ஈன்ற நாய் எனலாம். அந்தக் குட்டிகளுக்கு ஏதேனும் ஆபத்து வருகிறதோ என்று பார்ப்பவர்கள் அனைவரையும் ஓடிச் சென்று கடிக்கும்; அந்த நாயைக் கூறினார் எனலாம். (காலர்) - முன்பு "வீரக்கழல் கொண்ட கால்" என்று அவனை அடையாளம் காண்பிப்பார்கள். ஆனால் இப்போது "நாய் கடித்த கால்" என்று கூறுவதாக நிலைமை உள்ளது. (சிதைகிய பானையர்) - பார்க்கும் இடங்கள் அனைத்திலும் வளைந்தும், நசுங்கியும், எந்தவிதமான உபயோகமும் இல்லை என்று எறியப்பட்டும் உள்ள ஒன்றைக் கையில் எடுப்பான். முன்பு பொற்கலத்தில் உண்டவன் இப்போது ஒரு புதிய மண்பானை கூடக் கிடைக்காத நிலைமை. எது கிட்டியதோ அதனை உண்டு ஒரு மூலையில் பிழைத்துக் கிடப்போம் என்று உள்ளான். (பெருநாடு காண) - முன்பு காணிக்கையுடன் இவனைக் காண வந்தவர்கள், இவனைக் காண வாய்ப்பு இன்றி, ஆறு மாதங்களோ அல்லது ஒரு வருடமோ இவனுடைய அரண்மனையின் உள்ளே புக இயலாமல், வெயிலிலும் குளிரிலும் நின்று உலர்ந்தபடி இருந்த காலம் உண்டு. ஆனால் இன்று அவ்விதம் அல்லாமல், அனைவரும் எளிதாகக் காணும்படி உள்ளான். முன்பு நன்றாக வாழ்ந்து இப்போது தாழ்ந்து நிற்பதைக் காண அனைவரும் வருவார்கள். இவ்விதம் வாழ்ந்து, பின்னர் தாழ்ந்து போதல் என்பது இந்தப் பிறவியைக் கடந்து அடுத்த பிறவியிலோ என்றால், அப்படி அல்ல; (இம்மையில்) - அவ்விதம் வாழ்ந்த இந்தப் பிறவியிலேயே. (பிச்சை) - முன்பு அரசர்களுக்கு பல ராஜ்யங்களைத் தானமாக அளிக்கும்படியாக இவன் வாழ்ந்தான்; ஆனால் இப்போது, "பிச்சை எடுக்க ஒரு பாத்திரம் வேண்டும்", என்று கேட்கும்படி உள்ளான். (தாம் கொள்வர்) - முன்பு அரசர்கள் கொண்டு வரும் காணிக்கைகளை, அவர்களிடம் தான் நேரடியாக வாங்குவது தனது கௌரவத்திற்கு இழுக்கு என்று எண்ணி மற்றவர்கள் முலமாக வாங்கும்படி இருந்தான்; ஆனால் இன்று பிச்சை அளிப்பவர்கள் யார் என்று ஆராயாதபடி, தன் விருப்பம் மட்டுமே ஓங்கியபடி உள்ளான்.

**வ்யாக்யானம்** - ராஜ்யஸ்ரீ இங்ஙனேயான பின்பு, (திருநாரணன்தாள்) "இடர்க்கெடுத்த திருவாளன் இணையடி". ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளை ஆச்ரயித்து உஜ்ஜீவித்துப் போருங்கோள். "தத்ர நாராயண ஸ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித:" என்னக் கடவதிறே. ஓடுகொண்டு இரப்பார்க்கெல்லாம் இவனையொழியக் கதியில்லை; "ஓட்டுணொழித்த"வனிறே. (தாள்) "யாவந்த சரணௌ ப்ராது: பார்திவ வ்யஞ்ஜநாந்விதௌ"; "பிள்ளாய்! உன் உள்வெதுப்பு ஆறுவது எப்போது?" என்ன; "நானும் எனக்கு வகுத்த முடிசூடி, அவரும் தமக்கு வகுத்த முடிசூடின அன்றே" என்றானிறே. அப்படி தலையாக ப்ரார்த்திக்கப்பட்ட திருவடிகளை. "அடிசூடுமரசு" என்னக்கடவதிறே. (காலம் பெற) அரைநாழிகையாகிலும் முற்பட்டது உடலாக. "ஜீவிதம் மரணாந்தம் ஹி ஜராந்தே ரூப யௌவநே ஸம்பதச்ச விநாசாந்தா ஜாநந்கோத்ருதிமாப்நுயாத்" ஆகையால், "நாளைச் செய்கிறோம்" என்னுமதன்று; "யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே ஸாஹாநி:" அதுவே இவனுக்கு "அஸந்நேவ" என்னும்படி வருகிற அநர்த்தமாகிறது. "தந்மஹச்சித்ரம்" அநர்த்தம் வருகை அவகாசமும் அதுவே. "ஸா ப்ராந்தி:" விபரீத ஜ்ஞாநமாகிறதும் அதுவே. "ஸாசவிக்ரயா" நிஷித்தாநுஷ்டாநமாகிறதும் அதுவே. (சிந்தித்து) இனி "பரிகரமில்லை" என்று கண்ணழிவு சொல்லவேண்டா; அவன் தந்த கரணங்களை அவனுக்காக அமையும்; "ஸ்ம்ருதோ யச்சதி சோபநம்". (உய்ம்மினோ) அவ்வநுஸந்தாநம் பலத்தோடே வ்யாப்தம். "பேறு எல்லார்க்கும் வேணும்" என்றிருக்கையாலே எல்லார்க்குமாக அருளிச்செய்கிறார். (உய்ம்மினோ) அடியற்றால் வாடுமத்தனை கிடிகோள்; அடியைப் பேணி நோக்கி உய்ந்து போருங்கள்.

**விளக்கம்** - இராச்சியச் செல்வமானது இவ்விதமாக ஆன பின்னர், (திருநாரணன் தாள்) – பெரியதிருமொழி (6-9-1) - இடர்க்கெடுத்த திருவாளன் இணையடி - என்பதற்கு ஏற்ப உள்ள திருவடி. நீங்காத மஹாலக்ஷ்மியைக் கொண்ட ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை அண்டி நின்று பிழைக்க முயல்வீர்களாக. தத்ர நாராயண ஸ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித: - அந்த ஸ்ரீமந்நாராயணனிடம் நான் பிச்சையை வேண்டினேன் - என்பது காண்க. ஆகவே, மண் ஓடு கொண்டு பிச்சை எடுத்தபடி உள்ளவர்களுக்கு, இவன் அல்லாமல் வேறு கதி இல்லை. இங்கு

“ஓடு” என்பதை “மண்டை ஓடு” என்று பொருள் கொண்டு, பெரியதிருமொழி (3-4-2) – ஓட்டுணொழித்த - என்பதற்கு ஏற்ப, ருத்ரனையும் கூறுவதாகக் கொள்ளலாம். (தாள்) – இங்கு இராமாயணம் அயோத்யாகாண்டம் (98-8) - யாவந்ந சரணௌ ப்ராது: பார்திவ வ்யஞ்ஜநாந்விதௌ - என்று தமையனின் திருவடிகளை எனது தலையால் தாங்காதவரை என் மனம் அமைதி கொள்ளாது - என்பது காண்க. பரதனிடம், “உனது மனத்துடிப்பு ஆறுவது எப்போது?”, என்று கேட்கப்பட, அதற்குப் பரதன், “ நான் எனக்கு ஏற்பட்ட முடியான அவன் திருவடியை எனது தலையில் சூடி, அவனும் தனக்கு ஏற்பட்ட முடியான இந்த ராச்சியத்தைச் சூடும்வரை ஆகும்”, என்றான். இவ்விதம் தலையால் ப்ரார்த்திக்கப்பட்ட அவன் திருவடிகளை. பெருமாள் திருமொழி (10-7) - அடிசூடுமரசு - என்பது காண்க. (காலம் பெற) - அரைநாழிகை என்றாலும் சரீரத்தை முன்னதாகக் கொண்டு. சரீரம் நிலையற்றது என்பதால் காலம் தாழ்த்துதல் கூடாது என்பதற்கு ப்ரமாணம் கூறுகிறார். ஜீவிதம் மரணாந்தம் ஹி ஜராந்தே ரூப யௌவநே ஸம்பதச்ச விநாசாந்தா ஜாநந்கோத்ருதிமாப்நுயாத் – வாழ்வு என்பது இறப்பை முடிவாகக் கொண்டது; இளமை என்பது முதுமையை முடிவாகக் கொண்டது; செல்வம் என்பது அழிவை முடிவாகக் கொண்டது - என்பதால், “ நாளை செய்து கொள்ளலாம்” என்று தள்ளிப் போடத்தக்கது அல்ல. யந்முஹுர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே ஸாஹாநி: - ஒரு முகூர்த்தம் காலமாவது, ஒரு நொடியாவது வாஸுதேவனைச் சிந்திக்கவில்லை என்பது தீமையை ஏற்படுத்தும் - என்பதற்கு ஏற்ப, அத்தகைய நிலையே ஒருவனுக்கு, “அஸந்நேவ – இல்லாதவன் ஆகிறான்” என்று கூறும்படியாகவே ஆகிறான் என்றாகிறது; இவனுக்குக் கேடு ஏற்படவும் அதுவே காரணமாகிறது; இதுவே விபரீத ஞானமும் ஆகிறது; இதுவே சாஸ்த்ரங்களால் விலக்கப்பட்ட செயல்கள் என்றும் ஆகிறது. (சிந்தித்து) – “இனி வேறு வழி இலை” என்று குறைபடுதல் வேண்டாம்; அவன் அளித்த உடல் உறுப்புக்களை, அவனுக்குக் கைங்கர்யம் செய்ய அளித்தாலே போதுமானது. இந்தக் கருத்தை நெஞ்சில் நிலை நிறுத்த அல்லது அவன் திருவடிகளை நெஞ்சில் நிலை நிறுத்த, இந்த நிலை ஏற்பட்டுவிடும். ஸ்ம்ருதோ யச்சதி சோபநம் - அவனை நினைப்பதில் என்ன சிரமம் உள்ளது – என்பது காண்க. (உய்ம்மினோ) – அத்தகைய எண்ணம் என்பது பலனுடன் சேர்ந்தே உள்ளதாகும். இங்கு “பேறு என்பது அனைவருக்கும் தேவை” என்பதால், “உய்ம்மின்” என்று பன்மையில்

கூறுகிறார். (உய்ம்மினோ) - திருவடிகள் இல்லையென்றால் வாடும் நிலை என்பதால், அந்தத் திருவடிகளைப் பேணி நின்று பிழைக்க வழி தேடுவீர்களாக.

ஸ்வாமி நம்மாழ்வார் திருவடிகளே சரணம்
ஸ்வாமி நம்பிள்ளை திருவடிகளே சரணம்
ஸ்வாமி வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்

...தொடரும்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ஸ்வாமி திருவரங்கத்தமுதனார் அருளிச் செய்த

# இராமாநுச நூற்றந்தாதி

இதற்கு ஸ்வாமி பிள்ளைலோகம் ஜீயர் அருளிச் செய்த வ்யாக்யானம்
மூலமும், எளிய தமிழ்நடையும்
(பகுதி – 112)

101. மயக்கும் இருவினை வல்லியில் பூண்டு மதி மயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றிய என்னைத் துயரகற்றி
உயக்கொண்டு நல்கும் இராமாநுச என்றது உன்னையுன்னி
நயக்கும் அவர்க்கு இது இழுக்கென்பர் நல்லவர் என்றும் நைந்தே

**விளக்கவுரை** - புண்ணியம், பாபம் ஆகிய இரண்டையும் உண்டாக்கவல்ல கர்மங்கள் எனது அறிவைக் கெடுத்தபடி உள்ளன. இத்தகைய இவை இரண்டும் என்னைக் கட்டி வைத்து, எனது அறிவைக் கலக்கியபடி உள்ளன. இதனால் நான் துக்கம் ஏற்படுத்தவல்லதான இந்தப் பிறவியில் வந்து பிறந்தேன். இப்படிப்பட்ட எனக்கு எம்பெருமானார் செய்தது என்ன? ஜன்மம் போன்ற துன்பங்களை வேருடன் அழித்தார்; ஆத்மா எது, ஆத்மா அல்லாதது எது என்று உணர வைத்தார்; அடைய வேண்டிய இலக்கு எது என்று உபதேசித்து என்னைப் பிழைக்க வைத்தார். "இவ்விதமாக எனக்கு எம்பெருமானார் செய்தார்" என்று நான் கூறும் இவைகள் அனைத்தும், எம்பெருமானாரையே எப்போதும் நினைத்து, உள்ளம் உருகியபடி உள்ளவர்களுக்குச் சரியான கருத்தாகத் தோன்றாது – ஏன்? காரணம், எம்பெருமானாரின் கருணை என்பது ஸம்ஸார துன்பம் போக்குவது, ஆத்ம விவேகம் ஏற்படுத்துவது போன்ற செயல்களுக்கும் அப்பாற்பட்டது என்று கருத்து.

**அவதாரிகை** - கீழ்ப்பாட்டிலே எம்பெருமானாருடைய போக்யதையிலே "அருவினையேன் வன்நெஞ்சு" என்னும்படியான தம்முடைய திருவுள்ளமானது ஈடுபட்டபடியைச் சொல்லி, இப்பாட்டுக்குக் கீழ் பல இடங்களிலும் "தீதில்

இராமாநுசன்” என்றும், “தூயவன்” என்றும், “எங்களிராமாநுசன்” என்றும் தாம் அநுஸந்தித்த பாவநத்வத்தை ஸ்மரித்து, இந்த போக்யதைக்கும் அந்த பாவநத்வத்துக்கும் நெடுவாசி உண்டாகையாலும், இப்படி இருந்துள்ள இவ்விஷயத்துக்கு அது அவத்யமாய் தலைக்கட்டுவதாகையாலும், “அப்போது அத்தைத் தப்பைச் சொன்னோம். அத்தாலே அவர்க்கு என் பக்கல் ப்ரீதி மட்டாய்ப் போகிறதோ” என்று திருவுள்ளம் புண்பட்டு, இதிலே “பந்தாயா விஷயா ஸங்கி என்னும்படியான மநஸ்ஸையுடையனாய் தீரக் கழியச் செய்த துஷ்கர்மத்தாலே ஜந்ம பரம்பரைகளிலே தட்டித் திரியா நிற்கிற என்னை, அந்த துஷ்கர்ம பலமான ஜந்ம பரம்பரையாகிற துக்கத்தைப் போக்கி உஜ்ஜீவிக்கும்படிக் கைக்கொண்டு க்ருபை பண்ணியருளின எம்பெருமானாரே” என்று, “தேவரீருடைய பாவநத்வத்தை கீழ்ப்பலவிடங்களிலும் நான் சொன்ன இது, தேவரீரை அநுஸந்தித்து நீர்ப்பண்டம் போலே சிதிலராய்ப் போமவர்களுக்கு அவத்யமாயிருக்குமென்று ஜ்ஞாநாதிகரானவர்கள் ஸர்வகாலமும் சொல்லுவார்கள்” என்று எம்பெருமானாரைப் பார்த்து விண்ணப்பம் செய்கிறார்.

**விளக்கம்** - கடந்த பாசுரத்தில் எம்பெருமானாருடைய இனிமையில், “அருவினையேன் வன்நெஞ்சு” என்பதற்கு ஏற்ப உள்ள தனது திருவுள்ளமானது ஈடுபட்ட விதத்தை உரைத்தார். கடந்த பல பாசுரங்களில் தீதில் இராமாநுசன் – என்றும், தூயவன் – என்றும், எங்கள் இராமாநுசன் – என்றும் தான் எண்ணியதான “எம்பெருமானாருடைய தூய்மை” என்பதை நினைத்துப் பார்த்து, “இத்தகைய இவருடைய இனிமைக்கும், அத்தகைய தூய்மைக்கும் பெரிய வேறுபாடு உள்ளது என்றாலும், இவ்விதமாக உள்ள இந்த விஷயத்திற்கு அது குறைவாக உள்ளது போன்று தோன்றுவதாலும், அப்போது அதனைத் தவறாக உரைத்துவிட்டேன் என்றே எண்ணுகிறேன். இதன் விளைவாக எம்பெருமானார் என்னிடம் குறைந்த அன்பு காண்பிப்பாரோ”, என்று தனது திருவுள்ளம் புண்பட்டார். இந்தப் பாசுரத்தில் “பந்தாய விஷயாஸங்கி – பந்தம் மற்றும் மோக்ஷம் ஆகியவற்றுக்குக் காரணம் மனமே ஆகும்” என்பதாக உள்ள மனதைக் கொண்டவனாக, முற்றிலுமாகத் தாழ்ந்த செயல்களையே செய்தபடி உள்ளதால் பல பிறவிகளில் பலவிதமான பிறப்பு எடுத்துத் திரிந்தபடி உள்ள என்னை, அத்தகைய தீய கர்மங்களின் பலனாக உள்ள ஜன்மங்களின் வரிசை என்பதான துக்கத்தை நீக்கி, கரையேறும்படியாகக் கைக்கொண்டு க்ருபை செய்தருளிய எம்பெருமானாரே! உம்முடைய தூய்மை குறித்து நான் இதுவரை உள்ள பல பாசுரங்களில் உரைத்த அனைத்தும், உம்மையே எண்ணி நீர்ப்பண்டம் போன்று உருக்குலைந்து போகின்றவர்களுக்குத் தாழ்வாகவே தோன்றும் என்று அறிவுள்ளவர்கள்

எப்போதும் கூறியபடி இருப்பார்கள்", என்று எம்பெருமானரை நோக்கி விண்ணப்பம் செய்கிறார்.

**வ்யாக்யானம்** - (மயக்குமிருவினை வல்லியில் பூண்டு) தத்வ ஹித புருஷார்த்த தத் யாதாத்ம்ய ஜ்ஞாந விரோதிகளாய், வைஷயிக வ்யாமோஹத்தை யுண்டாக்கக் கடவதாய், பொன்விலங்கு போலவும் இரும்புவிலங்கு போலவும் ப்ராப்தி ப்ரதிபந்தங்களாய்க் கொண்டு புண்யபாப ரூபத்தாலே இருவகைப்பட்டிருக்கிற கர்மமாகிற பாசத்தாலே கட்டுண்டு. கழுத்திலே புக்க வாயோடுபோலே கழிக்கவொண்ணாதபடி காணும் ஆத்மாவை இக்கர்மமானது ஆவரித்துக் கொண்டிருக்கும்படி. மயக்குகையாவது - மதி மயங்கப் பண்ணுகை. "இருவினை வல்லியைப் பூண்டு" என்கிற பாடமானபோது, "இருவகைப்பட்ட கர்மமாகிற பாசத்தை ஸ்வார்ஜநத்தாலே ஏறிட்டுக் கொண்டு" என்று பொருளாகக் கடவது. (மதி மயங்கித் துயக்கும் பிறவியில் தோன்றிய என்னை) "அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:" என்கிறபடியே அத்தாலே "மதியெல்லாம் உள் கலங்கி" மனந்திரிவாகிற ஸம்சயத்தைப் பிறப்பிக்குமதான ஜந்ம பரம்பரைகளிலே தோள் மாறிப் பிறந்து ஸர்வலோக ஸாக்ஷிகமாக ஸம்ஸரித்துப் போந்தவென்னை. துயக்கு – மனந்திரிவு; அதாவது ஸம்சயம். மயங்குகை – கலங்குகை.

**விளக்கம்** - (மயக்குமிருவினை வல்லியில் பூண்டு) - உண்மை மற்றும் நன்மை ஆகியவற்றுடன் கூடிய புருஷார்த்தங்கள் குறித்து உள்ளது உள்ளபடி அடைவதற்குத் தகுதியாக உள்ளவையும், மற்ற விஷயங்களில் ஈடுபடுத்தி மயக்கத்தை உண்டாக்குபவையாகவும், பொன் விலங்கு மற்றும் இரும்பு விலங்கு போன்று அடைய வேண்டிய இலக்கிற்குத் தடையாக உள்ளதால் புண்ணியம் மற்றும் பாபம் என்னும் இரண்டுவகையாக உள்ளவையும் ஆகிய கர்மங்கள் என்ற கயிற்றால் கட்டப்பட்டு. எத்தனை அனுபவித்தாலும் கழுத்துடன் அகப்பட்ட பானை போன்று அல்லவோ இந்தக் கர்மங்கள் ஆத்மாவைச் சுற்றி வளைத்தபடி உள்ளன? மயக்குகை என்றால் அறிவில் தடுமாற்றம் உண்டாக்குதல். இங்கு "இரு வினைவில்லியில் பூண்டு" என்பதை "இருவினை வல்லியைப் பூண்டு" என்று படித்தால், "இரண்டு வகைப்பட்ட கர்மங்கள் என்ற கயிற்றைத் தனது முயற்சியால் தன் மேலே தானே ஏற்றிக்கொண்டு" என்று பொருள். (மதி மயங்கித் துயக்கும் பிறவியில் தோன்றிய என்னை) - கீதை (5-15) – அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ: - அஞ்ஞானத்தால் ஞானம் மூடப்பட்டுள்ளது. ஆகவே அனைத்து மனிதர்களும் மோஹம் அடைகிறார்கள் – என்பதற்கு ஏற்ப, அதன்

விளைவாக, திருவாய்மொழி (1-4-3) – மதியெல்லாம் உள்கலங்கி – என்று கூறுவது போன்று மனக் கலக்கம் என்னும் சந்தேகங்களை எழுப்புவதான பல்வேறு பிறவிகளில் மாறிமாறிப் பிறந்து, அனைத்து லோகத்தில் உள்ளவர்களும் காணும்படியாகத் திரிந்து கடந்த என்னை.

**வ்யாக்யானம்** – (துயரகற்றி உய்யக்கொண்டு நல்கும்) "கர்ப்ப ஜந்மாதி அவஸ்தாஸு துக்கம் அத்யந்ததுஸ்ஸஹம்" என்கிறபடியே கேட்டபோதே நடுங்கும்படியான கர்ப்ப ஜந்மாதி துக்கத்தை வாஸனையோடேயோட்டி, ஆத்மாநாத்மா விவேகத்தையும், த்யாஜ்யோபாதேய விவேகத்தையும், ஸ்வ பர ஸம்பந்த விவேகத்தையும் அடைவே யுண்டாக்கி உஜ்ஜீவிக்கும்படி கைக்கொண்டு என்னளவிலே அநிதர ஸாதாரணமான ஸ்நேஹத்தைப் பண்ணியருளின. "இராமாநுசா" என்றது, "எம்பெருமானாரே" என்று பரம பாவநராக நான் சொன்ன இது, (உன்னையுன்னி நயக்குமவர்க்கு) "குருரேவ பரம்ப்ரஹ்ம குருரேவபரந்தநம் குருரேவ பர:காம குருரேவ பராயணம் த்யாயேத் ஜபேந் நமேத்பக்த்யா பஜேதப்யர்ச்சயேத்முதா", "உபாயோபேயபாவேந தமேவ சரணம் வ்ரஜேத்", "யஸ்ய தேவே பராபக்திர் யதா தேவே ததா குரௌ" என்கிறபடியே, கரண த்ரயத்தாலும் தேவரீர் பக்கலிலே த்ருடாத்யாவஸாயத்தைப் பெற்று தேவரீரை அநுஸந்தித்து அதிப்ரீதராய் இருக்குமவர்களுக்கு. நயக்குகை – விரும்புகை.

**விளக்கம்** – (துயரகற்றி உய்யக்கொண்டு நல்கும்) – கர்ப்ப ஜந்மாதி அவஸ்தாஸு துக்கம் அத்யந்ததுஸ்ஸஹம் – கர்ப்பம், பிறப்பு முதலான நிலைகளை உண்டாக்குகின்றதும் துக்கம் நிறைந்ததும் - என்பதற்கு ஏற்ப, கேட்டவுடன் நடுங்கும்படி உள்ளதான கர்ப்பவாசம், பிறப்பு என்னும் துக்கங்கள் அனைத்தையும் அவற்றின் வாசனையுடன் விலக்கி, ஆத்மா மற்றும் ஆத்மா அல்லாதது என்பது குறித்த அறிவையும், விலக்க வேண்டியது மற்றும் ஏற்கவேண்டியது குறித்த அறிவையும், தனக்கும் மற்றவற்றுக்கும் உள்ள ஸம்பந்தம் குறித்த அறிவையும், தனக்கும் மற்றவற்றுக்கும் உள்ள ஸம்பந்தம் குறித்த அறிவையும் முற்றிலுமாக உண்டாக்கி, பிழைத்துக் கரையேறும்படியாக என்னைக் கைக்கொண்டு, என்னிடம் மற்றவர்கள் விஷயத்தில் காண்பிக்காத அன்பைப் பொழிந்த. "இராமாநுச" என்றது "எம்பெருமானாரே" என்று அனைத்து பாபங்களையும் போக்கவல்லவராக நான் உரைத்த இது. (உன்னையுன்னி நயக்குமவர்க்கு) - குருரேவ பரம்ப்ரஹ்ம குருரேவபரந்தநம் குருரேவ பர:காம குருரேவ பராயணம் த்யாயேத் ஜபேந்

நமேத்பக்த்யா பஜேதப்யர்ச்சயேத்முதா – குருவே பரப்ரஹ்மம், குருவே உயர்ந்த செல்வம், குருவே உயர்ந்த விரும்பப்படும் பொருள், குருவே உயர்ந்த கதி, குருவை எப்போதும் த்யானித்தபடியும், அவருடைய திருநாமத்தை ஜபித்தபடியும், அவரை வணங்கியபடியும் பக்தி செலுத்தி, அவரைப் பஜித்து அர்ச்சித்து – என்றும், உபாயோபேயபாவேந தமேவ சரணம் வ்ரஜேத் – தனக்கு உபாயமாகவும் உபேயமாகவும் குருவையே சரணம் அடைந்து – என்றும், யஸ்ய தேவே பராபக்திர் யதா தேவே ததா குரௌ – தெய்வத்திடம் எவ்விதம் பக்தி செலுத்துகிறோமோ, அதே போன்று குருவிடமும் பக்தி செலுத்தவேண்டும் – என்றும் கூறுவதற்கு ஏற்ப மனம், வாக்கு மற்றும் சரீரம் ஆகிய மூன்றாலும் உன்னிடம் உறுதியான நிலையை அடைந்து, உன்னை மட்டுமே எப்போதும் எண்ணியபடி இருந்து, மிகவும் அன்பு கொண்டபடி உள்ளவர்களுக்கு.

**வ்யாக்யானம் –** (இதிழுக்கு) - "நாற்றோளமுதே", "ஆராவமுதே" என்னுமாப்போலே, "இராமாநுசன் எனக்கு ஆராமுதே", "அடியேற்கின்று தித்திக்கும்" என்னும்படியான நிரவதிக அதிசய ரஸத்தை யாவதாத்மபாவியாக அநுபவித்து ப்ரீதனாயிருக்க வேண்டியிருக்க, அப்படிச் செய்யாதே ஸம்ஸார நிவர்த்தகத்வ மாத்ரோபகாரத்தைச் சொன்ன இது அவத்யம் என்று. (நல்லவர் என்றும் நைந்தே) "வாசா யதீந்த்ர மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்த யுகளம் பஜதாம் குருணாம் கூராதிநாத குருகேச முக ஆத்ய பும்ஸாம்" என்கிறபடியே தேவரீருடைய போக்யதையை ஸர்வகாலமும் அநுபவித்துக் கொண்டு போந்து நீர்ப்பண்டம்போலே சிதிலராயிருந்த ஆழ்வான், பிள்ளான் முதலான முதலிகள், (என்பர்) சொல்லுவார்கள்.

**விளக்கம் –** (இது இழுக்கு) – திருவாய்மொழி (6-10-9) – நாற்றோளமுதே – என்றும், திருவாய்மொழி (5-8-1) – ஆராவமுதே – என்றும் கூறுவது போன்று, இராமாநுச நூற்றந்தாதி (19) - இராமாநுசன் எனக்கு ஆரமுதே – என்றும், கண்ணிநுண்சிறுத்தாம்பு – அடியேற்கின்று தித்திக்கும் – என்றும் எல்லையற்ற இனிமை பொருந்திய சுவையை உள்ளது உள்ளபடி அனுபவித்தபடி நின்று மகிழ வேண்டியதாக உள்ளபோது, "ஸம்ஸாரத்திலிருந்து விடுபடும்படிச் செய்யும் உபகாரம் கொண்டவர்" என்று மட்டுமே உரைத்தால் தாழ்ந்தது அல்லவோ என்று. (நல்லவர் என்றும் நைந்தே) – யதிராஜ விம்சதி (3) - வாசா யதீந்த்ர மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்த யுகளம் பஜதாம் குருணாம் கூராதிநாத குருகேச முக ஆத்ய பும்ஸாம் பாதாநு சிந்தந பர: ஸததம் பவேயம் - யதிகளின் அரசரே! என்னுடைய மனம் எப்போதும் உம்மால் நியமிக்கப்பட்ட குருபரம்பரையில் தொடர்கின்ற

ஆசார்யர்களின் தாமரை போன்ற திருவடிகளையே எண்ணியபடி இருத்தல் வேண்டும். கூரத்தாழ்வான், திருக்குருகைப்பிரான்பிள்ளான் போன்றவர்கள் தங்கள் வாக்கு, மனம், செயல் ஆகிய மூன்றாலும் உனது திருவடிகளிலேயே நிலைத்து நின்றனர். இவர்களது திருவடிகள் எனது எண்ணத்தில் எப்போதும் நிலைக்கவேண்டும் - என்பதற்கு ஏற்ப உன்னுடைய இனிமையை எப்போதும் அனுபவித்தபடி இருப்பதால் நீர்ப்பண்டம் போன்று உருக்குலையும் ஸ்வாமி கூரத்தாழ்வான், திருக்குருகைப்பிரான்பிள்ளான் போன்ற ஆசார்யர்கள், (என்பர்) - கூறுவார்கள்.

**வ்யாக்யானம் –** அன்றிக்கே, "உன்னை யுன்னி நைந்து என்றும் நயக்குமவர்க்கு இதிழுக்கென்பர் நல்லவர்" என்று அந்வயிக்க்கவுமாம். அப்போது தேவரீரை அநுஸந்தித்து சிதிலராய் ஸர்வகாலமும் விருப்பத்தை பண்ணுமவர்களுக்குத் தண்மை என்றும் சொல்லுவர்கள் ஸத்துக்களானவர்கள் என்றபடி. நல்லவர் என்றது தேவரீருக்கு ஸ்நேஹியானவர் என்றுமாம். தேவரீருடைய போக்யதையை அநுஸந்தித்து, "மாதா பிதா யுவதய: தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்" என்றும், "அத்ர பரத்ரசாபி நித்யம் யதீய சரணௌ சரணம் மதீயம்" என்றும், "ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே" என்றும் சொல்லுகிறபடியே தேவரீரை ஸர்வபந்துவாக அநுஸந்தித்து இருக்குமவர்களுக்கு, கநிஷ்டன் ஜ்யேஷ்டாநுவர்த்தநம் பண்ணாதொழிந்தால் அவன்றனக்கு அது குற்றமாய் தலைக்கட்டுமாப்போலே அவர்களைப் பின் சென்று கொண்டு இப்படி சொன்னேனாகையாலே அவத்யமாய்த் தலைக்கட்டும் என்றாய்த்து.

**விளக்கம் -** அல்லது வேறுவிதமாகவும் பொருள் கூறலாம். இங்கு "உன்னை உன்னி நைந்து என்றும் நயக்குமவர்க்கு இதிழுக்கென்பர் நல்லவர்" என்றும் வரிசைப்படுத்தலாம். இவ்விதம் கொண்டால், "உம்மை எண்ணியபடி உருக்குலைந்து அனைத்து காலங்களிலும் உம்மிடம் தங்களுடைய விருப்பத்தைக் காண்பித்தபடி உள்ளவர்களுக்குத் தாழ்வு என்று ஸாதுக்கள் கூறுவார்கள்" என்று பொருளாகிறது. "நல்லவர்" என்றால், "உமக்கு அன்பானவர்கள்" என்று பொருள். உம்முடைய இனிமையை எண்ணியபடி, ஸ்தோத்ரரத்னம் (4) – மாதா பிதா யுவதய: தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் – என்னையும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் எந்த ஒரு நம்மாழ்வாரின் திருவடிகளே தாய், தந்தை, செல்வம் போன்ற அனைத்துமாக உள்ளனவோ – என்றும், ஸ்தோத்ரரத்னம் (2) - அத்ர பரத்ரசாபி நித்யம் யதீய சரணௌ சரணம் மதீயம் – இங்கும் அங்கும் எந்த ஒரு

நாதமுனிகளுடைய திருவடிகளே புகலிடமோ – என்றும், ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே - என்றும் கூறுவதற்கு ஏற்ப, உம்மையே அனைத்துவிதமான உறவினராக எண்ணியபடி உள்ளவர்களுக்கு. இளையவர்கள் மூத்தவர்களை எண்ணாமல் இருந்தால் அது அவர்களுக்குத் தோஷமாகவே முடியும் என்பது போன்று, அவர்களைப் பின் தொடர்ந்து இவ்விதம் உரைத்தேன் என்பதால் தாழ்ந்ததாகவே முடியும் என்று கருத்து.

ஸ்வாமி திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்
ஸ்வாமி பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்

...தொடரும்